# முகவுரை.

श्रीशिवाभ्यां नमः

परस्पर तपस्संपत्फलायित परस्परौ।
प्रपंचमाता पितरौ प्रांचौ जायापतीस्तुमः ॥

பாரத தேசம் தர்மத்தை ப்ரதானமாய்க் கொண்டது. र्मो विश्वस्य जगतः प्रतिष्ठा लोके धर्मिष्ठं प्रजा उपसर्पन्ति धर्मेणपापमपनुदति सर्वं प्रतिष्ठितं तस्माद्धर्मं परमं वदन्ति'' தர்மத்தில் உலகம் ழுவதும் நிற்கிறது. தர்மம் செய்பவனை எல்லோரும் ண்டி ஜீவிக்கிறார்கள். தர்மத்தினால் பாபம் போகிறது. ர்மத்தில் எல்லாம் நிலை பெற்றுள்ளது என்று வேதம் தர் த்தை புகழ்ந்துபேசுகிறது. வேதத்தில் கூறிய தர்மங்களைப் பரும்பாலும் அனுஷ்டானம் செய்வது க்ருஹஸ்தாச்ரமத் லுள்ளவர்களாலேயே முடிந்த கார்யம். முறைப்படி ஒருப் ண்ணை மணந்து அவளுடன் செய்யும் தர்மங்கள் க்ரு றஸ்த தர்மமெனப்படும். ஆதலால் விவாஹம் சாஸ்த்ரீய ாக ஸித்தித்தால்தான் க்ருஹஸ்தாச்ரம தர்மம் ஸித்திக் ்றது. அவர்களின் குழந்தைகளும் தர்ம ஸந்ததியாகின் னர். ஆகையினாலேயே தர்மபத்நீ என்று பெயர். பாரத தேசத்தில் உள்ள க்ருஹஸ்தன், வேறு உலகத்திலுள்ள தேவர்கள், பித்ருக்கள், ரிஷிகள், பூதங்கள் மற்று முள்ள ப்ராணிகள் எல்லோருக்கும் வைச்வதேவம் முதலிய கர்மாக்களை அனுஷ்டித்து த்ருப்தியளிக்கிறான். ஆகையினால் முன் கூறியவை எல்லாம் பயன்பட விவாஹம் நன்கு நடந்தேறவேண்டும். நான்கு நாட்கள் அக்னியை .பாஸனம் செய்து, சேஷஹோமம் செய்து பூர்த்தி செய் ால்தான் விவாஹம் ஸித்திக்கும். தற்காலத்தில் சில ்பந்தத்தால் ருதுவான பிறகு விவாஹம் செய்ய டுகிறது. அப்படிச் செய்யும் விவாஹத்தை தர்ம ஹமாகக் கருத தர்மசாஸ்த்ரத்தில் இடமிருப்பதாகத் பில்லை. கலியுகத்தில் தர்ம ஸங்கோசங்களும் சில ும் கூறப்பட்டுள்ளன. அங்கும் இதை தர்மமென . தீர்க்கதர்சிகளான மஹரிஷிகள் ருதுவான

பெண்ணை மணக்க நேர்ந்தால், பெண்ணின் தந்தை
வின் எண்ணிக்கையுள்ள கோதாநம், அல்லது
கோதானமாவது செய்யவேண்டும். பெண் 3 நாள்
சாப்பிட்டு, ரத்னாபரணத்தை ருதுவாகாத பெண்ணுக்
தானம் செய்யவேண்டும். மணம் செய்துகொள்ளும் வ
கூச்மாண்ட ஹோமம் செய்யவேண்டும். மூன்றுபேர்கபு
இம்மூன்று கார்யங்களையும் செய்து பிறகு விவாஹம் செ
தால் அது சாஸ்த்ரீயமாகுமென்று கூறியிருக்கின்றன
அக்னியின் முன்னிலையில் மந்திரங்களைச் சொல்லி முறை
படிச் செய்யும் விவாஹத்தினால் தாம்பத்யம் ஸித்திக்கி
றது. தாம்பத்தியஸித்திக்கு மூலமான விவாஹத்
மந்திரார்த்தங்கள் தெரிந்துகொண்டு செய்வது விசே
மாயுள்ளது. ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசார்ய
அவர்களின் ப்ரியசிஷ்யரான ஸ்ரீமான் E. S. சுப்ரமண்
அய்யர் அவர்கள் தன் ஸீமந்த புத்ரியான ஸௌபாக்யவ
பாலமைதிலியின் விவாஹம் நிச்சயமானவுடன் தன
க்ருஹத்தில் தனது பந்துக்கள், சம்பந்திகளின் பந்துக்க
இவர்களைச் சேர்த்து விவாஹ மந்திரார்த்தத்தை கேட்டு
படிச் செய்து, மேற்கூறியபடி ருதுதோஷநிஷ்க்ருதியு
செய்து நான்கு நாட்கள் முறைப்படி விவாஹம் செய்வித்
தார். மேலும் விவாஹத்தின் ஞாபகம் எப்பொழுதும் தார்
மீகர்கள் மனத்தில் இருக்கும்படியாக மந்திரார்த்தத்தை
எழுதும்படி என்னிடம் கூறினார். அதிக அவகாசமில்லா
தாலும் விரிவாக ஆகுமாதலாலும், சில மந்திரங்களை
அர்த்தத்துடன் எழுதியுள்ளேன். இந்த தம்பதிகளான
ஸௌ. மைதிலியும், சி. ஜானகிராமனும் தீர்க்காயுஸ்
ஆரோக்யம், ஸத்ஸந்தானத்துடன் மகிழ்ந்து குடும்
வாழ்க்கையை நடத்துமாறு ஆதிம தம்பதிகளான பார்
பரமேச்வரர்களை அனுக்ரஹம் செய்யும்படி ப்ரார்த்
கிறேன்.

மயிலை, } தர்மக்ரு
கீலகஞு தைமீ } M. இராமநாத தீ

# விவாஹ மந்த்ரார்த்தம்

## தமிழுரையுடன்

**श्री शिवाभ्यां नमः**

கல்யாணம் செய்துகொள்ளத் தகுதியுடைய பெண்ணை பார்த்து வருவதற்கு கற்றறிந்த நான்கு ஸ்நேகிதர்களைக் கல்யாணம் செய்துகொள்ளும் வரன் அனுப்புகிருன். அவர்களைப் பின்வரும் இரு மந்த்ரங்களால் “நீங்கள் சென்று வாருங்கள்” என்று ப்ரார்த்திக்கிருன்.

१. प्रसुग्मन्ता धियसानस्य सक्षणि वरेभिर्वरा॑ अभिषुप्रसीदत ।
अस्माकमिन्द्र उभयं जुजोषति यत्सौम्यस्यान्धसोबुबोधति ॥

२. अनृक्षरा ऋजवः सन्तु पन्थायेभिः सखायो यन्तिनो वरेयम् ।
समर्यमा संभगोनो निनीयात्संजास्पत्य॑ सुयममस्तु देवाः ॥

ஸ்நேகிதர்களே! நன்ருகச் செல்லும் தன்மையுடையவர்களே! நீங்கள் இந்த நிமிஷமே சிறந்த பாதைகளில் சென்று கன்னிகையின் தந்தையை அடைவீர்களாக. நண்பர்களே! தங்கள் காரியத்தை இந்திரனும் உத்தரவு கொடுத்துள்ளான். அவனுடைய உதவியும் தங்களுக்குண்டு. எங்களிருவரின் சேர்க்கையை இந்திரனும் விரும்புகிருன். ஏனெனில் அவனுக்கு பிடித்தமானது ஸோமரஸம்; அந்த ரஸமாகிற அன்னத்தை நாங்கள் கொடுப்போம் என்று ஆவலுடன் எதிர்ப்பார்த்துக்கொண்டிருக்கிருன் இந்திரன். *

கன்னிகையின் தந்தை வீட்டிற்கு செல்கின்ற என் தாழர்கள் செல்லும்பாதை கல் முதலிய கெடுதல்களில்லா

---

* குறிப்பு: (க்ருஹஸ்தாச்ரமத்தில் பல யாகங்கள் [illegible]து இ[illegible]திரனுக்கு ஸோமரஸத்தை அளித்துப் பல தர்ம[illegible]ங்களை இவர்கள் செய்வார்கள் எனப் பொருள் கூறப்[illegible]து)

மல் இருக்கக்கடவது. எங்களிருவரையும், பகன், அர்
என்ற இருதேவதைகளும் சேர்த்துவைக்கட்டும். தே
களே! எங்களுடைய தாம்பத்ய உறவு சிறப்புடையத
இருக்கட்டும்.

இவர்கள் சென்று பெண்ணை நிச்சயம் செய்
அழைத்து வந்தவுடன் பெண்ணைப் பார்த்து வரன் கீழ்
காணும் மந்த்ரத்தைச் சொல்லவேண்டும்.

अभ्रातृघ्नीं वरूणापतिघ्नीं बृहस्पते ।

इन्द्रापुत्रघ्नीं लक्ष्म्यं तामस्यै सवितः सुव ॥

வருணனே! இப்பெண்ணுக்குத் தமையன் தம்பிமார்களைக் கொல்லாமலிருக்கும் சக்தியைக் கொடுப்பாயாக, பிருஹஸ்பதியே! கணவனைக் கொல்லாமலிருக்கும் சக்தியைக் கொடுப்பாயாக. இந்த்ரனே! குழந்தைகளைக் கொல்லாமலிருக்கும் சக்தியைக் கொடுப்பாயாக! சூர்யனே எல்லாவிதமான மங்களங்களையும் கொடுப்பாய். **

கீழ்க்காணும் மந்திரத்தினால் பெண்ணை நன்கு பார்த்தல் வேண்டும்.

अघोरचक्षुरपतिघ्न्येधि शिवापतिभ्यः सुमनास्सुवर्चाः ।

जीवसूर्देवकामास्योना शंनो भव द्विपदे शं चतुष्पदे ॥

பெண்ணே! நல்ல மங்களகரமான பார்வையை உடையவளாகவும், கணவனைக் காப்பாற்றுபவளாகவும் இருப்பாயாக! கணவன் மைத்துனன் முதலியவர்களுக்கு நல்லதைக் கொடுப்பவளாக இருப்பாயாக! நல்ல மனமுடையவளாக இருப்பாயாக! நல்ல ப்ரகாசமுடைய பெண்ணாக விளங்கி, நீண்ட ஆயுளையுடைய பிள்ளைகளையுடையவளாகவும், தேவபூஜைகளில் ஊக்கமுடையவளாகவும், நல்ல கீர்த்தியுடையவளாகவும் இருப்பாயா
உன் வருகையினால் என் வீட்டிலுள்ள எல்லா மனிதர்களு
கும், பசு முதலிய ப்ராணிகளுக்கும் மங்களம் உண்
கட்டும்.

---

**குறிப்பு: இந்தப்பெண் வருகையின் மூலம் தமை
கணவன், குழந்தை முதலியவர்களுக்குக் கெடுத
படாமல் இருக்கவேணுமென்று ப்ரார்த்திக்கப்படுகிற

இந்த நுகத்தடியும் அதன் துவாரமும், உனக்கு மங்களத்தைக் கொடுக்கும்படி வேண்டுகிறேன். பிறகு நீ உன் கணவனுடன் (என்னுடன்) சேர்ந்து வாழ்வாயாக.

(அடுத்துவரும் ஐந்து மந்திரங்களால் ப்ராம்மணர்கள் ஜலம் கொண்டுவந்து பெண்ணை அபிஷேகம் செய்ய வேண்டும். விரிவாக ஆகுமாதலால் அதை எழுதவில்லை.) பிறகு கூறைப்புடவையை கொடுத்தல்வேண்டும்.

परित्वा गिर्वणो गिर इमा भवन्तु विश्वतो वृद्धायुमनु

वृद्धयो जुष्टा भवन्तु जुष्टय: ॥

பலவிதமாக துதிக்கத்தக்க ஹே இந்திரனே! நீ இப்பெண்ணை இப்புடவையானது சூழ்ந்துகொள்வதுபோல் என்னுடைய இவ்வார்த்தைகள் பெரியோர்களை அனுஸரித்து வாழ்க்கை நடத்தும் உன்னைச் சூழ்ந்துகொண்டு மகிழ்விக்கட்டும், அதை ஏற்றுக்கொண்டு அருள்வாயாக.

பிறகு தர்ப்பத்தால் பின்னிய கயிற்றை பெண்ணின் இடுப்பில் கட்டவேண்டும்.

आशासाना सौमनसं प्रजाँसौभाग्यं तनूम् ॥

अग्नेरनुव्रता भूत्वा सन्नह्ये सुकृतायकम् ॥

இந்தப்பெண் தனக்கு ஸௌபாக்யம் முதலான இவையெல்லாம் வேண்டுமென்று விரும்புகிறவளாகவும் அக்னி பகவானை அனுஸரிப்பவளாகவும் காணப்படுகிருள். ஆகையால் இப்பெண்ணிற்கு ஸுகமாக இருப்பதின் பொருட்டு இக்கயிற்றைக் கட்டுகிறேன்.

கீழ்க்காணும் மந்திரத்தால் பெண்ணின் வலது கையைத் தன் வலது கையால் பிடித்துகொண்டு அக்னிக்கு மேற்புறத்தில் பட்டுப்பாயில் இருவரும் உட்காரவேண்டும்.

पूषात्वेतो नयतु हस्तगृह्याश्विनौ त्वा प्रवहता ँरथेन ।

गृहान्गच्छ गृहपत्नी यथाऽसो वशिनी त्वं विदथमावदासि ॥

சூர்ய பகவானானவன் உன்னை ஹோமம் செய்யும் இடத்திற்கு அழைத்துக்கொண்டும், ஹோமத்திற்குப் பிறகு அச்வினீ தேவர்கள் தேரில் என் வீட்டிற்கு அழைத்துக் கொண்டும் செல்லவேண்டும். பிறகு என் வீட்டின் தலைவியாக இருந்துகொண்டு, எல்லாவற்றையும் உனக்கு ஸ்வா

தீனமாகச் செய்துகொண்டும், யாகாதி நல்ல விஷயங்களைப் பேசுபவளாகவும் விளங்குவாயாக !

கீழ்க்காணும் இருமந்திரங்களால் பெண்ணைத் தொட வேண்டும்.

१. सोमः प्रथमो विविदे गन्धर्वो विविद उत्तरः

तृतीयो अग्निष्टे पतिस्तुरीयस्ते मनुष्य जाः ॥

२. सोमोऽददद्गन्धर्वाय गन्धर्वोऽददद्ग्नये ।

रयिं च पुत्राँश्चादादग्नि र्मह्यमथो इमाम् ॥

பெண்ணே ! உன்னை முதலில், ஸோமதேவனும், பிறகு விச்வாசு என்ற கந்தர்வனும், பிறகு அக்னி தேவனும், அடைந்து, உன்னை காப்பாற்றிப் பிறகு மனிதனுன நான் உனக்குக் கணவனுகிறேன். மேலும் இப்பெண்ணை ஸோமதேவன் கந்தர்வனுக்கும், கந்தர்வன் அக்னி தேவனுக்கும், அக்னி பகவான், புத்ராதிகளையும் உன்னையும் எனக்குக் கொடுத்துள்ளான்.

பின்வரும் நான்கு மந்திரங்களால் பெண்ணின் வலது கையை தனது வலது கையால் பிடித்துக்கொள்ளவேண்டும். இது பாணிக்ரஹணம்.

१. गृभ्णामि ते सुप्रजास्त्वाय हस्तं मया पत्या जरदष्टिर्यथाऽसः :

भगो अर्यमा सविता पुरन्धिर्मह्यं त्वाऽदुर्गार्हपत्याय देवाः ॥

२. ते ह पूर्वे जनासो यत्र पूर्ववहो हिताः ।

मूर्धन्वान् यत्र सौभ्रवः पूर्वो देवेभ्य आतपत् ॥

३. सरस्वति प्रेदमव सुभगे वाजिनीवति ।

तं त्वा विश्वस्य भूतस्य प्रगायामस्यग्रतः ॥

४. य एति प्रदिशः सर्वा दिशोऽनुपवमानः ।

हिरण्यहस्त ऐरम्मः स त्वा मन्मनसं कृणोतु ॥

பெண்ணே ! நீ நல்ல குழந்தைகளுக்குத் தாயாக ஆகவேண்டுமென்பதற்காகவும், என்னுடன் வெகுகாலம் வாழ்ந்து ஸுமங்கிலியான கிழவியாக ஆகவேண்டுமென்

பதற்காகவும், அக்னியை உபாஸிப்பதற்காகவும் பகன் முதலான தேவர்கள் உன்னை எனக்குக் கொடுத்தனர்.

முன் கூறிய பகன் முதலான தேவர்கள் முற்காலத்தில் விவாஹத்தைச் செய்துவைப்பவர்களாகவும், க்ருஹஸ்தாச்ரமத்திலிருப்பவர்களாகவும், இருந்தனர். அவர்களுக்குள் ஆதித்யன் என்ற தேவன் நன்கு ப்ரகாசமுள்ளவன், ஆகையினால் அப்படிப்பட்ட தேவர்கள் க்ருஹஸ்தாச்ரமத்தை நடத்த எனக்கு உன்னைக் கொடுத்தனர்.

எல்லா மங்களத்தையும் கொடுப்பவளும். அன்னத்தையுடையவளும், (கர்மாக்களையுடையவளும்) (அன்னஸம்ருத்தியை கொடுத்து ரக்ஷிப்பவள்) உள்ள ஸரஸ்வதிதேவி இந்தப் பாணிக்கிரகணத்தைக் காப்பாற்றட்டும்.

எல்லா திசைகளிலும் ஸஞ்சரிக்கின்றவனும், பக்தர்களுக்கு வழங்கத் தங்கத்தைக் கையில் வைத்திருப்பவனும் அக்னிதேவனுக்குத்துணைவனுமான இப்படிப்பட்ட வாயுதேவன் உன்னை என்னிடம் அன்பு உள்ளவளாக செய்யட்டும்.

(குறிப்பு : இந்த நான்கு மந்த்ரங்களால் வரன்வதூவின் கையை ஐந்து விரல்களுடன் பிடிப்பதுதான் பாணிக்ரஹணம் என்று சொல்லப்படுகிறது விவாஹத்தில் இது முக்கியமானது)

பிறகு கீழ்க்காணும் ஏழு மந்திரங்களால் அக்னிக்கு கிழக்காகவோ, அல்லது வடக்காகவோ, முடியும்படி பெண்ணின் வலது காலை பிடித்து எடுத்து வைக்கும்படிச் செய்யவேண்டும்.

१. एकमिषे विष्णुस्त्वाऽन्वे तु ॥

२. द्वे ऊर्जेविष्णुस्त्वाऽन्वेतु ॥

३. त्रीणिव्रताय विष्णुस्त्वाऽन्वेतु ॥

४. चत्वारि मायोभवाय विष्णुस्त्वाऽन्वेतु ॥

५. पञ्चपशुभ्यो विष्णुस्त्वान्वेतु ॥

६. षड्डुतुभ्यो विष्णुस्त्वाऽन्वेतु ॥

७. सप्त सप्तभ्यो होत्राभ्यो विष्णुस्त्वाऽन्वेतु ॥

மணப்பெண்ணின் காலைப்பிடிப்பதன் மூலம் முதல் அடியிலிருந்து ஏழு அடிவரையில் முறையே அன்னஸம்ருத்திக்காகவும், உடல் பலத்துக்காகவும், பலவித வ்ரதங்களை யனுஷ்டிப்பதற்காகவும், சுகமாக வாழ்வதற்காகவும் பசுஸம்ருத்திக்காகவும், ருதுக்களின் பலன்களை அனுபவிப்பதற்காகவும் ருத்விக்குகளை (ஹோத்ருக்களை) உடைய அக்னிஷ்டோமாதியாகங்களைச் செய்வதற்காகவும், பெண்ணுக்குப் பின்னால் எங்கும் நிறைந்துள்ள விஷ்ணு பகவான் வருவாராக.

(குறிப்பு : இங்கே சொல்லியுள்ள பலன்களை அடைவதற்காக ஒவ்வொரு அடியிலும் விஷ்ணு பகவான் பின் தொடர்ந்து வந்து நம்மை ரக்ஷிக்கட்டும் என்பது பொருள்.)

ஏழாவது அடிக்குப் பிறகு கீழ்க்காணும் மந்திரத்தைக் கணவன் ஜபிக்கவேண்டும்.

सखा सप्तपदाभव सखायै सप्त पदा बभूव सख्यं ते गमेयँ सख्या त्ते मायोषँ सख्यान्मेमायोष्ठास्समयाव संकल्पावहैसंप्रियौ रोचिष्णू सुमनस्यमानौ। इषमूर्जमभिसंवसानौ सन्नौ मनाँसि संव्रता समुचित्तान्याकरम्॥

सात्वमस्यमूहममूहमस्मि सात्वं द्यौरहं पृथिवीत्वँ रेतोऽहँ रेतो भृत्वं मनोऽहमस्मि वाक्त्वं सामाहमस्म्यृक्त्वँ सामामनु व्रता भव पुंसे पुत्राय वेत्तवै श्रियै पुत्राय वेत्तवा एहि सूनृते॥

ஏழு அடி எடுத்துவைத்துள்ள பெண்ணைப் பார்த்து வரன் கூறுவதாவது: நீ எனக்கு வாழ்க்கைத் துணைவியாக இருப்பாயாக. நாமிருவரும் இணைப்பிரியா நண்பர்களாகவும், எப்பொழுதும் ஒன்று சேர்ந்துள்ளவர்களாகவும் பரஸ்பரம் அன்புள்ளவர்களாகவும், நன்கு ப்ரகாசிப்பவர்களாகவும், அன்னத்தையும், உடல் பலத்தையும் சேர்ந்து அனுபவிப்பவர்களாகவும், வாழ்க்கையில் நம்மிருவரின் மனதும் வ்ரதங்களும் எண்ணங்களும் என்றும் ஒரே மாதிரியாக இருப்பவர்களாகவும், நீ ரிக்காகவும், நான் ஸாமமாகவும், நான் தேவலோகமாகவும், நீ பூலோகமாகவும், நான் வீர்யமாகவும், நீ வீர்யத்தைத் தாங்குபவளாகவும், நான் மனமாகவும், நீவாக்காகவும், இருப்போமாக.

பிறகு அக்னியை வலமாக வந்து அக்னிக்கு எதிரில் உட்காரவேண்டும் பதினாறு மந்திரங்களால் நெய்யினால் ஹோமம் செய்யவேண்டும்.

१· सोमाय जनिविदे स्वाहा।

இப்பெண்ணை முதலில் அடைந்த ஸோமராஜாவிற்கு இந்த ஹோமத்தைச் செய்கிறேன்.

२· गंधर्वाय जनिविदे स्वाहा॥ ३. अग्नये जनिविदे स्वाहा॥

அடுத்தபடியாக அடைந்த கந்தர்வனுக்கும், மூன்றாவதாக அடைந்த அக்னி பகவானுக்கும், இந்த ஹோமத்தைச் செய்கிறேன்.

४. कन्यलापितृभ्यो यती पतिलोकमवदीक्षामदास्थ स्वाहा॥

பெண்ணானவள் தந்தை வீட்டிலிருந்து வரன் வீட்டிற்குச் செல்லும்பொழுது வ்ரதாநுஷ்டானங்களில் நன்மை ஏற்படுவதற்காக இந்த ஹோமத்தைச் செய்கிறேன்.

५. प्रेतोमुञ्चाति नामुतस्सुबद्धाममुतस्करत्।

यथेयमिन्द्रमीढ्वस्सुपुत्रा सुभगासति स्वाहा॥

இந்திரனே! இப்பெண்ணை அவளுடைய தந்தை குலத்திலிருந்து விடுவித்து வரனாகிய என் குலத்தில் சேர்த்து வைத்தும், அங்கேயே த்ருடமாக இருக்கும்படியும், நல்ல குழந்தைகளையும், பல மங்களங்களையும், உடைய வளாகவும் இவளைச் செய்வாயாக.

६. इमां त्वमिन्द्रमीढ्वस्सुपुत्रां सुभगां कुरु।

दशास्यां पुत्राना धेहि पतिमेकादशं कृधिस्वाहा॥

இந்திரனே! இப்பெண் நல்ல குழந்தைகளை உடைய வளாகவும், நல்ல பாக்யசாலியாகவும் இருக்கும்படி அருள் செய். மேலும், இவள் பத்து குழந்தைகளைப் பெறும்படியும், பதினோராவதாக கணவனைப் பேணும்படியும் அருள் புரிவாயாக.

७· अग्निरैतु प्रथमो देवतानाँ सोऽस्यै प्रजां मुञ्चतु मृत्युपाशात्।

तदयँ राजा वरूणोनुमन्यतां यथेयँस्त्री पौत्रमघं नरोदात्स्वाहा॥

தேவர்களில் முதல்வனான அக்னி பகவான் இப்பெண்ணின் குழந்தைகளை யமனிடமிருந்து காப்பாற்றட்டும், அக்னி தேவன் செய்வதை வருண பகவான் அனுமதிக்கட்டும். இவர்களின் அருளால் இந்தப் பெண் என்றும் குழந்தைகளுக்காக கண்ணீர்விடாமல் வாழட்டும். (குழந்தைகளைப் பற்றிய கவலையற்று வாழ்வாளாக என்று பொருள்)

८. इमामग्निस्त्रायतां गार्हपत्य: प्रजामस्यै नयतु दीर्घमायु:।

अशून्योपस्था जीवतामस्तु माता पौत्रमानन्दमभिप्रबुध्यतामियँस्वाहा ॥

இந்தப் பெண்ணை அக்னி பகவான் காப்பாற்றட்டும் இவளுடைய குழந்தைகளையும் நீண்ட ஆயுள் உள்ளவர்களாகச் செய்யட்டும். இவள் மடியில் என்றும் குழந்தைகள் படுத்தவண்ணமிருக்கட்டும். இவள் புத்திர ஸம்பந்தமான ஆனந்தந்தை எப்பொழுதும் அனுபவிக்கட்டும். குழந்தைகளின் ஆனந்தத்தை எண்ணித் தூக்கத்திலிருந்து விழித்துக்கொள்ளட்டும்.

९. मातेगृहे निशिघोष उत्थादन्यत्र त्वद्रुदत्यस्संविशन्तु।

मात्वं विकेश्युर आवधिष्ठा जीवपत्नी पतिलोके विराज पश्यन्ती

प्रजाँ सुमनस्यमानाँ स्वाहा ॥

பெண்ணே! உன் வீட்டில் இரவில் அழுகைக் குரல் கேட்காமலிருக்கட்டும். உன் சத்துருவின் வீட்டில் ரோதனமிருக்கட்டும். உனக்குத் துக்ககரமான சப்தம் வர வேண்டாம். தீர்க்க சுமங்கலியாக பர்த்தாவின் வீட்டில் எப்பொழுதும் ப்ரகாசித்துக்கொண்டும், நல்ல புத்ராதிகளை மகிழ்ச்சியுடன் பார்த்துக்கொண்டும், நீ நீடூழிவாழ்வாயாக.

१०. द्यौस्ते पृष्ठँरक्षतु वायुरूरू अश्विनौ च स्तनं धयन्तँ सविताऽभिरक्षतु।

आवाससः परिधानाद्बृहस्पतिर्विश्वेदेवा अभिरक्षन्तु पश्चात् स्वाहा ॥

பெண்ணே, உன்னுடைய பின்புறம் முதலியதை தேவலோக அபிமானி தேவன் காப்பாற்றட்டும், உன் ஸ்தனங்களை அச்வினீ தேவர்களும், உன் பால் சாப்பிடும் குழந்தைகளை சூரியனும், (கூறைப்புடவை கட்டிக்கொள்ளும் வரை) ப்ருஹஸ்பதியும், பிறகு ஆயுட்காலம் பூராவும் விச்வே தேவர்களும் உன்னை காப்பாற்றட்டும்.

११. अप्रजस्तां पौत्रमृत्युं पाप्मानमुतवाघम् ।

शीर्ष्णस्स्रजमिवोन्मुच्य द्विषद्भ्यः प्रतिमुञ्चामि पाशँ स्वाहा ॥

பெண்ணே! உனக்கு ஏற்படக்கூடிய புத்ரோத்பத்திக்கும் இடையூரான தோஷத்தையும், சரீர ஸம்பந்தமான ரோகாதிகளையும், சிறுவயதிலே குழந்தைகளைக் கொல்லும் பாபத்தையும், தலையில் வைத்து வாடிய புஷ்பங்களை எடுத்து எறிவதுபோல் உன்னிடத்திலிருந்து எடுத்து என் விரோதிகளை அடையுமாறு விசி எறிகிறேன். (நீ கெடுதல்களுக்கு ஆளாகாமல் சுகமாக ஜீவிப்பாயாக என்பது பொருள்.)

१२. इमं मे वरुण श्रुधीहवमद्या च मृडय ।

त्वामवस्यु राचके स्वाहा ॥

வருணதேவனே! என்னுடைய இந்த அழைப்பை ஏற்று என்னைப் பாதுகாப்பாயாக. மேலும் நீ என்னை மகிழ்விப்பாயாக.

१३. तत्वायामि ब्रह्मणा वन्दमानस्तदाशास्ते यजमानो हविर्भिः ।

अहेडमानो वरुणेह बोध्युरुशँ समान आयुः प्रमोषीस्स्वाहा ॥

பலரால் துதிக்கப்படுகின்ற வருணதேவனே! கோபிக்காமல் இங்கு நான் சொல்வதை நீ கேட்பாயாக. யாகங்களைச் செய்பவர்களும் கூட ஹவிர்பாகங்களைக் கொடுத்து இதையே அல்லவா வேண்டுகின்றனர். ஆதலால் நானும் உன்னை யாசிக்கிறேன்.

१४. त्वन्नो अग्ने वरुणस्य विद्वान् देवस्य हेडोऽवयासिसीष्ठाः ।

यजिष्ठो वह्नितमश्शोशुचानो विश्वा द्वेषांसि प्रमुमुग्ध्यस्मत्स्वाहा ॥

எல்லாவற்றையும் அறிந்த அக்னிதேவனே, எங்கள் மீது வருண தேவனுக்குள்ள கோபத்தை நீ தணிப்பாயாக. நன்கு யக்ஞங்களைச் செய்பவனும், தேவர்களுக்கு ஹவிர் பாகத்தை எடுத்துச் செல்பவனும், நன்கு ப்ரகாசிக்கின்றவனுமான அக்னியே! எங்களுடைய விரோதிகளையும் அழிப்பாயாக.

१५. सत्वन्नो अग्नेऽवमो भवोती नेदिष्ठो अस्या उषसो व्युष्टौ ।

अवयक्ष्व नो वरुणँ रराणो वीहिमृडीकँ सुहवो न एधि स्वाहा ॥

அக்னிதேவனே! நீ தேவர்களுக்கெல்லாம் முதன்மையாக இருந்துகொண்டும், எங்களை ரக்ஷித்துக்கொண்டும். எங்கள் ஸமீபத்திலேயே இருப்பாயாக. மேலும் வருணனிடமிருந்து எங்களை ரக்ஷித்தும். தேவையுள்ள பொருளை எங்களுக்குக் கொடுத்தும், எங்களை மகிழ்ச்சியுடன் இருப்பவர்களாகவும் செய்து, நாங்கள் கொடுக்கும் ஹவிர்பாகங்களை நன்கு எடுத்துச் செல்வாயாக.

१६. त्वमग्ने अयास्ययासन्मनसा हित: ।

अयासन् हव्यमूहिषेऽयानो धेहि भेषजँ स्वाहा ॥

அக்னி தேவனே! நீ பக்தர்களிடம் நெருங்கிவரும் பழக்கமுடையவன், அப்படிப்பட்ட உன்னை மனதால் நன்கு வேண்டுகிறோம். பக்தர்களுக்கு ப்ரியனாக இருக்கிற நீ தேவர்களுக்கு ஹவிஸ்ஸைக் கொடுத்தும் அதனால் த்ருப்தியடைந்த நீயும் எங்களுக்கு (நோய்வரின்) மருந்துகளைக் கொடுப்பாயாக.

பிறகு அடுத்துவரும் மந்திரத்தால் அக்னிக்கு வடக்கே அம்மி மீது பெண்ணின் வலது காலை எடுத்து வைத்தல் வேண்டும்.

आतिष्ठेममश्मानमश्मेवत्व ँ स्थिरा भव ।

अभितिष्ठ पृतन्यतस्सहस्वपृतनायत: ॥

ஏ பெண்ணே! இக்கல்லின் மீது நீ ஏறி நிற்பாயாக. இக்கல்லைப் போல நீ ஸ்திரமாகவும் (உடல் வலிமையுள்ளவளாகவும்) உன்னை எதிர்த்து நிற்பவர்களை வெல்லுபவளாகவும் இருப்பாயாக.

பெண்ணின் இருகைகளில் நெற்பொரியைக் கொட்டிப் பின்வரும் மந்திரத்தால் ஹோமம் செய்யவேண்டும்.

इयं नार्युपब्रूते कुल्पान्यावपन्तिका ।

दीर्घायुरस्तु मे पतिर्जीवातु शरदश्शत ँ स्वाहा ॥

அக்னி பகவானே! நெற்பொறிகளை ஹோமம் செய்கின்ற இந்த பெண் என் கணவன் நீண்டகாலம் நூறு ஆண்டுகள் வாழவேண்டும் என்று சொல்லி இருகைகளிலுள்ள லாஜங்களை ஹோமம் செய்து அக்னி தேவனிடம் ப்ரார்த்திக்கிருள்.

அடுத்துவரும் மூன்று மந்த்ரங்களால் அக்னியை ஒரு முறை ப்ரதக்ஷிணம் வரவேண்டும்.

१. तुभ्यमग्रे पर्यवहन्सूर्यां वहतुनासह ।

पुनः पतिभ्यो जायाँ दा अग्ने प्रजया सह ॥

२. पुनःपत्नी मग्निरदादायुषासहवर्चसा ।

दीर्घायुरस्या यः पतिस्स एत शरदश्शतम् ॥

३. विश्वा उत त्वया वयं धारा उदन्या इव ।

अतिगाहेमहिद्विषः ॥

அக்னிபகவானே! ஆதி காலத்தில் விவாஹத்திற்கு அதிஷ்டான தேவதையான "ஸூர்யா" என்னும் பெண்ணைக் கல்யாணப் பெண்ணுக்கு கொடுக்கும் சீர் வரிசைகளுடன் உனக்குக் கொடுத்தது போலவும், இப் பெண்ணுக்கு நீண்ட ஆயுளும் சரீர காந்தியும், இவள் கணவன் நீண்ட காலம் நூறு ஆண்டுகள் ஜீவித்திருப்பவனு கவும். நல்ல மழையிலும்கூட மழையை லக்ஷ்யம் செய்யா மல் எருது முதலியவைகள் செல்வதுபோல, நாங்களும் எல்லா விரோதிகளையும் எதிர்த்து ஸமாளிக்கும்படியாகவும், நீ அருள் புரியவாயாக.

முன்போல் அம்மிமீது நின்று கொண்டு கீழ்க் காணும் மந்திரத்தால் இரண்டாவது முறை நெற்பொறி ஹோமம் செய்ய வேண்டும்.

अर्यमणं नु देवं कन्या अग्निमयक्षत । स इमां देवो अध्वरः

प्रेतोमुञ्चाति नामुतस्सुबद्धाममुतस्करत्स्वाहा ॥

அக்னிதேவனை பூஜித்ததின் பயனுக இப்பெண் கணவ னுகிய என்னை அடைந்தும், மறுபடியும் செய்கின்ற லாஜ ஹோமத்தால்ப்ரீதியடைந்த அக்னி தேவன் தந்தையின் வீட்டிலுருந்து இவளைக் கணவன் வீட்டிற்கு அனுப்பி அவ்விடமே நிலைத்து இருக்கும்படி செய்வாராக.

(பிறகு முன்கூறியபடி மூன்று மந்தரங்களால் அக்னியை வலம் வரவேண்டும்).

மீண்டும் அம்மிமீது ஏறி நின்று கொண்டு கீழ்க்காணும் மந்திரத்தால் மூன்ருவது முறை நெற்பொரி ஹோமம் செய்ய வேண்டும்.

त्वमर्यमा भवसि यत्कनीनां नाम स्वधावत्स्वर्यं बिभर्षि ।

अञ्जन्तिवृक्षँ सुधितं न गोभिर्यद्दम्पती समनसा कृणोषि स्वाहा ॥

அக்னி தேவனே! நீ கன்னிகைகளுக்கு அன்னாதிகளைக் கொடுத்து வளர்க்கின்றாய். அவர்களும் நடப்பட்ட செடிகளுக்கு நீர் ஊற்றுவதுபோல் உன்னை நெய் முதலியவற்றால் வளர்க்கின்றனர். அதன் பயனாக நீ தம்பதிகளை ஒரு மனதுடையவர்களாகச் செய்கிறாய். (வாரி வழங்கும் உன் கொடை குணத்தை எவ்வாறு கூறுவது) என்று பொருள். பிறகு முன்போல் அக்னியை ப்ரதக்ஷிணமாக வரவேண்டும். பிறகு "ஜயாதி" முதலிய ஹோமங்களைச் செய்தல் வேண்டும்.

பிறகு கீழ்க் காணும் இரு மந்திரங்களால் இடுப்பில் கட்டிய தர்ப்பக்கயிற்றை அவிழ்த்துவிட வேண்டும்.

१. प्रत्वा मुञ्चामि वरुणस्यपाशाद्येन त्वाऽबध्नात्सविता सुकेतः ।

धातुश्च योनौ सुकृतस्यलोके स्योनं ते सह पत्या करोमि ॥

२. इमं विष्यामि वरुणस्य पाशं यमबध्नीत सविता सुशेवः ।

धातुश्च योनौ सुकृतस्य लोकेऽरिष्टां त्वा सह पत्या कृणोमि ॥

எல்லாம் வல்ல சூர்யதேவன் இந்தக் கயிற்றைக் கட்டினார். அதை அவிழ்ப்பதின் மூலம் உன்னை வருணனுடைய பந்தத்திலிருந்து விடுவிக்கிறேன். (வருணனுடைய பந்தம் கெடுதலென வேதத்தில் கூறுகிறது. நீரால் ஏற்படும் ஸகல வ்யாதிகளையும் வருணபந்தம் என்று சொல்லலாம்) ஆதலால் இதை அவிழ்ப்பதின் மூலம் புண்ய கர்மாக்களைச் செய்தவர்களுக்காக இருக்கும் ப்ரும்ம லோகத்தில் சுகமாக இருப்பதற்கும், கணவனோடுகூட (என்னுடன்கூட) அழிவற்ற புண்யம் செய்து வாழ்வதற்கும் அங்கு இடத்தை, ஸம்பாதிக்கிறேன்.

இதனால் இனி நாம் இருவரும் நல்லகார்யங்களை செய்து நிறைய புண்யத்தைஸம்பாதிப்போம் என்று தாத்பர்யம் கூறப்பட்டது).

(விவாஹமந்திரம் மட்டும் அர்த்தத்துடன் முடிந்தது)

சுபமஸ்து.